# ஆர்யதர்மம்

புத்தகம் 17, ஸஞ்சிகை 43

ஆங்கிரஸ, கார்த்திகை 16

[December 01, 1932]

Record no. 287

*Āryatarmam*
*Puttakam 17, sañcikai 43*
*Āṅkirasa, Kārttikai 16*
*[December 01, 1932]*

Record no. 287

ஸ்ரீ திரிபுரசுந்தரீ ஸமேத ஸ்ரீசந்திரமௌளீசுவராய நம:

# ஆர்ய தர்மம்.

ஆரியர்களே!

நமது நாட்டில் கலப்பு விவாஹம் என்பது இப்போது எங்கும் பரவிவிட்டது. ஆலயப் பிரவேசத்தைப்போல் இதையும் நவீன சீர்திருத்தக்காரர்கள் அவச்யமென்று கருதுகிறார்கள். இதற்குப் பிரமாணமுண்டா? என்று வினவினால் "வைதிகர்கள் எதற்கும் முட்டுக்கட்டை" என்று வைதிகர்களைத் திட்டுவார்கள். தேசமுன்னேற்றத்துக்குக் கலப்பு விவாஹமும் ஒரு காரணமாம். மேனாட்டு நாகரீகமயக்கத்தால் புத்தியில் புலப்பட்டதை எல்லாம் தேசக்ஷேமகரமென்றே சொல்லுகிறார்கள். கலப்பு விவாஹமென்பது பெருத்த பாபச்செயலாகும். விவாஹத்தால் தான் ஜாதி தத்வநிர்ணயம் ஏற்படவேண்டும். தற்போது பிரத்தியக்ஷானுபவத்திலிருக்கிற ஜாதி பேதத்தை ஒருக்காலும் அழிக்கமுடியாது. ஜாதி என்பது வஸ்துவின் ஸ்வரூபம். அதனை அழிக்க முயல்வது ஸ்வரூபத்தையேயழிக்க முயல்வதாகும். ஜாதி பேதத்தை நாம் ஏற்படுத்திக்கொள்ளவில்லை. பகவான் அதை ஸிருஷ்டித்தார். மரம், செடி, கொடி, மிருகம் முதலியவைகளின் ஜாதி பேதத்தை எப்படி அகற்றமுடியாதோ அப்படியே மனிதர்களின் ஜாதி பேதத்தையும், அகற்றவும், மாற்றவும் இயலாது. கலப்பு விவாஹத்தால் ஜாதிபேதம் அதிகரிக்குமேயன்றி குறையாது.

இதுதான் சங்கரஜாதி என்பது. "வர்ணஸங்கரம் நரகத்தையே கொடுக்கும்" என்று கீதாசாரியர் உபதேசித்திருக்கிறார். கலப்பு விவாஹத்தால் சுத்த ஜாதி பரம்பரை அற்றுவிடும். அதனால் ஹிந்துமதத்திற்கே ஹானியுண்டென்பது நிச்சயம். விவாஹமென்பது, காமாக்னியை அணைத்துக்கொள்வதற்காகவென்று கருதக்கூடாது. தீண்டாதாருக்கு ஆலயப் பிரவேசாதிகாரம் அளிப்பதனால் ஹிந்துமதத்திற்கு யாதொரு ஹானியுமில்லை என்று சொல்லுகிறவர்களே இதனாலும் யாதொரு ஹானியுமில்லை என்று சொல்கிறார்கள். இப்படி ஒவ்வொரு விஷயத்திலும் சொல்வார்களேயானால் உலகத்தின் கதிதான் என்ன ஆகும்? ஹிந்து மதத்திற்கு வேறு அடையாளந்தான் என்ன? பாதிரிமார்களைக் கண்டித்து ஹிந்துமதத்தை காப்பாற்றவேண்டும் என்றும் சொல்லுகிறார்கள். இது எதற்கு? இவர்களுக்கும் அவர்களுக்கும் வித்தியாஸம் எந்த விஷயத்திலிருக்கிறது? இவர்களுடைய கொள்கைக்கும், கிறிஸ்தவப் பாதிரிகளின் கொள்கைக்கும் முடிவில் வித்தியாசம் அணுவளவும் இல்லையே! ஹிந்துமதத்திற்கு அஸ்திவாரமாயுள்ள ஜாதிவ்யவஸ்தையை ஒழிக்க எத்தனிப்பதனால் வேரற்ற மரம்போல் மதம் மடிந்துவிடும். ஆதலால் ஆஸ்திகர்களே! கலப்பு விவாஹத்தைக் கனவிலும் நினைக்காதீர்கள். உங்கள் ஜாதியையும் மதத்தையும் கடமையையும் இழந்துவிடாதீர்கள். சுபம்.

V. J. S.

# ஆர்ய தர்மம்.

ஆங்கிரஸஹூ கார்த்திகைமீ கசூ

## காந்திஜியின் சாஸ்திர வாதம்.

ஸ்ரீ பகவத்கீதையைத்தவிர மற்றவைப் பிரமாணமல்லவென்றும், கீதை ஒன்றுதான் தமக்கு முக்கியப் பிரமாணமென்றும், அதனுல் தாமும் "ஸனுதன ஹிந்து" தானென்றும், கீதையில் தீண்டாமைக்கு ஆதாரமில்லையென்றும், காந்திஜி சொல்லியிருக்கிறர். இது நியாயமா வென்பதை விளக்கவேண்டியது அவச்யமாகும். ஸநாதந ஹிந்துவின் நல்லொழுக்கத்தைத் தெரிவிப்பது கீதையைத்தவிர வேறு பிரமாண புஸ்தகங்கள் ஒன்றும் இல்லை என்பது கீதையாலேயே தெரியவில்லையே. பலவிடங்களில் வேதங்களைப்பற்றிய வியவஹாரம் கீதையில் காணவில்லையா? கீதையில் கூறியுள்ள வேதங்களை ஏன் பிரமாணமென்று காந்திஜி ஒப்புக் கொள்ளவில்லை? இதுவரையில் "வேதங்களால் அருளப்பட்ட மதம் ஹிந்துமதம்" என்று யாவரும் அங்கீகரித்திருக்க, இவர் மட்டிலும் இதற்கு விரோதமாக "கீதையில் சொல்லப்பட்டது தான் ஹிந்துமதம்" என்று சொன்னுல், இதை அங்கீகரிக்கலாமா? கீதை ஒன்றுல் மட்டிலும் ஸநாதந ஹிந்துவின் ஸகல கடைமைகளும் தெரிவிக்கப்பட்டுவிட்டனவா? கீதையில் ஆலயம் சொல்லியிருக்கின்றதா? உபனயனம் விவாஹம் முதலியவைகளின் அனுஷ்டானமுறை கூறியிருக்கின்றதா? இவர் கொண்டிருக்கும் கொள்கைகளுக்கும் செய்துவரும் காரியங்களுக்கும் கீதையில் எங்கே யாவது ஆதாரமிருக்கின்றதா? இவருடைய உபவாஸத்திற்கும் ஆகாரத்திற்கும் ஆதாரம் கீதையிலுண்டா? கீதையில், காணப்படும் "ச்வபாகன்" "பாபயோநய:" என்ற பதங்களுக்குக் கருத்துத் தான் என்ன? தீண்டாமைவிலக்குக்கும் இதிலேதாவது இடமுண்டா?

இவர் எல்லோரும் நெசவு செய்தால் நன்மை பெறலாம் என்று சொல்லுகிறுரே, அதற்கும் ஆதாரம் இதிமிருக்கின்றதா? ஒருஸமயம் அவரது நண்பரொருவர் கீதையைமட்டும் காந்திஜி பிரமாணமென்று நம்புவதற்குக் காரணம் ஒன்று சொன்னுர். அது என்னவென்றுல், தமது கதரியக்கத்துக்கு கீதை இடங்கொடுத்திருக்கிறது என்றும், ராட்டினத்தில்தான் கீதைக்கு மஹாதாத்பர்யம் என்றும், அதற்கு

"एवं प्रवर्तितं चक्रं नानुवर्तयती ह यः ।
अघायुः ... ... ... ... ... ॥

என்ற இந்த சுலோகந்தான் ஆதாரமென்றும், இங்குள்ளசக்ரபதத்திற்கு ராட்டினந்தான் அர்த்தமென்றும், சொன்னுர். என்ன விந்தை பாருங்கள்!

எல்லோரும் நெசவுசெய்யுந் தொழிலாளிகளாக ஆகவேண்டுமென்று கீதை சொல்லுகின்றதா? இந்தியாவிற்கு எல்லாத் தொழில்களும் ஸமமாகத் தேவை என்ற ஸங்கதியை காந்தியைப் போல் கீதாசாரியரும் மறந்துவிட்டாரா? எல்லோரும் ஒரே தொழிலை நாடலாமா? மற்றத் தொழில்களெல்லாம் பலஹீனம் பெறுவது இவருக்கு ஸம்மதமா? நெசவில்போல் மற்ற தொழிலிலும் நன்மையுண்டென்று ஏன் பிரசாரஞ் செய்யக்கூடாது? கீதையிலுள்ள சக்ரபதத்திற்கு அவரதுநண்பர் சொன்ன அர்த்தம் அவருக்கும் ஸம்மதமாயிருந்தால், கீதைக்குவியாக்கியானம்செய்த எங்கள் பாஷ்யகாரர்கள் மூவரும் புத்திவ்யாமோஹம் அடைந்துவிட்டார் என்பதும் அவருக்கு ஸம்மதமாகிவிடும். கீதையின் மகத்வமே மகத்வம்! அது யாவருக்கும் யாவற்றிற்கும் அவகாசங் கொடுக்கின்றதல்லவா?

காந்திஜி "தான் கடவுளைக் கண்டுபிடிக்க முயலுகின்றவனென்றும், "நான்" "எனது" என்ற பற்று விட்டொழித்தவர் மூலந்தான் கடவுள் தமது அபிப்பிராயத்தை நிறைவேற்றுவதாக கீதை சொல்லுகின்றதென்றும், எழுதுகிறுர். கடவுளைக் காணுவதற்கு பாஹ்யப் பிரபஞ்ச சீர்திருத்தமா காரணம்? இவ்விதம் கீதை சொல்லுகின்றதா? பாஹியப் பிரபஞ்சத்தை மறந்து, ஆத்மநிஷ்டையுள்ளவனல்லவா கடவுளைக் காணமுடியுமென்று கீதை உபதேசிக்கின்றது. மேற்கு ஸமுத்திரத்துக்குப் போகக் கருதியவன், கிழக்குஸமுத்திரம் போகக்கூடியமார்க்கஞ்சென்றுல் மேற்கு ஸமுத்திரம் போகமுடியுமா? கடவுளைக் காணுவதற்குக்

கீதையில்சொன்ன கர்மயோகம், ஞானயோகம், பக்தியோகம் இவற்றைபல்லவா பயிலவேண்டும். இம்மூன்று மார்க்கத்துக்கும் காந்திஜியின் உலக சீர்திருத்த மார்க்கத்துக்கும் பெரிய விரோத மல்லவா ? கீதையில் உலகில் விருப்பு வெறுப்பு இல்லாதவன்தான் உத்தமன் என்று சொல்லியிருப்பதைக் கவனிக்கலாகாதா ?

காந்திஜி கடவுளைக் கண்டுபிடித்தவரென்று சொல்வதாயிருந்தாலும், உலகின் கதியைப்பற்றிய சிந்தனை இவருக்கு அவச்யமில்லை என்றுதான் ஏற்படுகிறது. "நான்" "எனது" என்ற பற்று அற்றவர் மூலம் கடவுள் தம் காரியத்தை நிறைவேற்றிக் கொள்வதாக இவர் சொல்வது கீதையிலில்லாததே. கடவுளைக் கண்டபிறகுதானே "நான்" "எனது" என்ற பற்று விலகும். கடவுளைக் காணுவதற்கு முன்பு இவ்விதப் பற்று அற்றுவிட்டதுபோல் தோன்றினாலும் உண்மையில் அற்றுவிட்டதாகாது. மீண்டும் பற்று உண்டானாலும் உண்டாகலாம். பற்றும் பற்றில்லாமையும் செய்கையால்தான் கண்டுகொள்ளவேண்டும். பற்றில்லாத விவேகிகளின் நடத்தை வேறு, பற்றுள்ள பாமரரின் நடத்தை வேறு; இவ்விருவரின் நடத்தையும் கீதையிலேயே விசதமாகக்காண்கிறது.

காந்திஜி பற்றுள்ளவரா ? பற்றற்றவரா ? என்பதையும் அவருடைய நடத்தைதான் விளக்கவேண்டும். தம்மைப் பற்றற்றவராகவேதான் காந்திஜி கருதுகிறார், அவருடைய நடத்தையோ பற்றற்றவருடையதல்ல. பற்றுள்ள பாமரருடையதே. கடவுளைக் காணவில்லை என்று இவரே சொல்வதால், இவருக்கு இன்னம் பற்று அறவே இல்லை என்பது ஸித்தம். இவரை ஒரு அவதாரமாக ஒப்புக்கொண்டால், இவருடைய நடத்தை எல்லாம் பற்றின்மாக ஒப்புக்கொண்டால்... வாத மஹானின் நடத்தைபோலாகும். அப்படியானல் பிடிவாதம், ஸஜ்ஜனிகளிடம் மறைந்தத்வேஷம், வேண்டினவர்களிடம் விச்வாஸம், இவை முதலிய தீயகாரியங்களைக் கீதையின்படி விலக்கிக் கொண்டு சாஸ்திரப்பிரமாண வாயிலாக இந்தியாவுக்கு விடுதலையை நாடுவதுதான் நலமாகும். கீதையில் அவதார காரியத்தை நிறைவேற்றிக்கொள்வதற்காக, முதலில் சாஸ்திர நம்பிக்கை அவச்யம் என்றும் அந்த சாஸ்திரத்தைத்தான் ஜனங்கள் நம்பும்படி முதலாவதாகச் செய்யவேண்டுமென்றும் சொல்லவில்லையா ? ஆகவே கீதையைத்தவிர மற்ற எவையும் சாஸ்திரங்களாகாவென்று தைரி



யமாக மறுக்குமிவரை அவதார புருஷரெனக் கூறுவதற்கு இடமில்லை.

கீதைக்குப் புறம்பாகவுள்ளவை சாஸ்திரமாகாது என்று சொல்லுகிற காந்திஜி, கீதையை வியாஸர் எழுதினர் என்பதை ஒப்புக்கொள்வாரென்று நினைக்கிறேன். "எழுதினவர் யாரென்று தெரியாத புத்தகங்களை நான் நம்பமாட்டேன்" என்று இவர் சொல்லியிருக்கிறார். ஆகவே இவருக்கு கீதையை எழுதினவர் யாரென்று தெரிந்துவிட்டதாலும், மற்ற காரணத்தாலும் தான் இதில் நம்பிக்கை உண்டாயிற்றென்று ஏற்படுகிறது. அப்படியானல் வியாஸர் எழுதிய மஹாபாரதத்தையும், 18 புராணங்களையும் ஸ்மிருதியையும் இவை யாவுக்கும் மூலமாயுள்ள வேதங்களையும் ஏன் இவர் நம்பவில்லையோ தெரியவில்லை. கீதையின் முக்கிய கருத்துக்குவிரோதமாயுள்ளகீதாச்லோகங்களுக்கு காந்திஜியின் அபிப்பிராயப்படி எவ்வித கதி ஏற்படுகின்றதோ, அதே கதி மற்ற புஸ்தகங்களுக்கும் ஏன் இவர் ஏற்படுத்திக்கொள்ளக் கூடாது ?

தவிர ஒரு புத்தகத்தில் பாதிநம்பிக்கை பாதி அவநம்பிக்கை என்பது எளனத்துக்கிடமாகும். ஒரு புத்தகத்தையாவது பூராவும் நம்பவேண்டாமா ? ஹிந்துமதக் கிரந்தமொன்றையுமே ஒப்புக்கொள்ளாத இவரை, "பிராமாணிக ஹிந்து" என்று எப்படி அழைப்பது ?

இவ்விந்தியாவிலுள்ள வாஸ்தவ ஹிந்துவொருவனும், "நான் ஸநாதந ஹிந்து"வென்று சொல்லிக்கொள்ளமாட்டான். இவரோ அடிக்கடி சொல்லிக்கொள்கிறார். எதற்காக ? தன்னை ஹிந்துவல்லவென்று ஒருவரும் நினைக்காமலிருப்பதற்காக. இவர் வாஸ்தவ ஹிந்துவாயின் கடவுளைக்காணப் பலவிதிகள் நிறைந்த பொக்கிஷ வடிவமாகிய வேதங்களை ஏன் இவர் அவமதிக்கிறார். வேதத்தை ஒப்புக்கொள்ளாத எவனும் ஹிந்துவாவான ?

"கடவுள் ஒருவருண்டு" என்பதை இவர் எதன் மூலம் தெரிந்துகொண்டார். கீதையாலென்றல், கீதைக்கு முந்திக் கடவுளில்லையா ? கடவுள் நித்தியமென்று கீதையில் சொல்லவில்லையா ? ஆகையால் வேதம் முதலிய 18 வித்யாஸ்தானங்களையும் வீண் புஸ்தகம் என்று காந்திஜி சொல்வது நியாயமில்லை.

வைதிகதர்சனக்காரர்கள் அனைவரும் வேதங்களின் பிராமாண்யத்தையும் பெருமையையும் எடுத்துக் கூறியிருப்பதை வீண் பண்ணலாமா ?

பிரிய வாசகர்களே! சாஸ்திரம் என்ற பதத்திற்கு "சரியான நடத்தை" என்று அர்த்தமாம். சரியான நடத்தைக்கு ஆதாரம் சாஸ்திரமா ? சரியான நடத்தை சாஸ்திரத்துக்கு ஆதாரமா ? ஆகவே இவர் சொல்வதெல்லாம் சரியில்லை. இவருக்குச் சாஸ்திர ஆராய்ச்சி போதாது. ஹிந்து சாஸ்திராபிப்பிராயத்தைத் தெரிந்து கொள்வதிலுமிவருக்கு விருப்பமில்லை. காந்திஜியும் கடைசியில் கடவுளைச் சரணாகதி பண்ணட்டும். நாமும் கடவுளையே தியானம் செய்துவருவோம். என்ன முடிவு ஏற்படுகின்றது என்று பார்ப்போம். சுபம்.

V. ஜகதீசுவர சாஸ்திரிகள்.

---

## இப்போது இசைவீரேல், பின் வரும், பெரும் கேடு.

அந்த்யஜர்களை ஆலயங்களில் விட்டாலும் விடலாம். தன்னுசையின்றிப், பிறர் தூண்டுதலாலே, கிளம்பியுள்ள கூத்தாட்டம், கொஞ்ச நாளில் கீழே உட்காரும். அப்படி ஆகாவிட்டாலும், ஆஸ்திகர் அஞ்சாமல், சீர் கெட்ட கோவில்களை சாதிகெட்டபேரிடம் விட்டு, தம் இல்லத்திலோ, உள்ளத்திலோ ஈசனை பஜிக்கலாம்.

ஆனால், புது நிர்ப்பந்தக்காரர்கள், இப்போது கேட்பது முதலாவது படியாம்; இது கைக்கு வந்ததும், இனிமேல் வரப்போகும் பல படிகளுண்டாம். எல்லாவற்றையும் நினைத்து, இப்போது நடப்பது விவேகிகள் கடமை.

பட்டினிகிடப்பதால் பயங்கொண்டு, ஆலயத்தைவிட்டுவிடுவதானால், "உன் பெண்ணையே மணப்பேன் ; அல்லது பட்டினியால் இறப்பேன்", என்று வழிப்போக்கன் ஒருவன் உம்மை வழிமறித்துக் கேட்டால், "அப்படியே ஆகட்டும்" என்று அஞ்சி ஒப்புவீரா ?

"ஜனவரி-௴ முதல்தேதி நெருங்குமுன், சொன்னபடி செய்யுங்கள் ; அன்றேல், காந்திஜி இறப்பார்," என்று எச்சரிக்கை செய்கிறார் ஸ்ரீமான் ராஜகோபாலாச்சாரியார். ஸ்நேஹத்தை ஸ்தாபிக்க, தர்மத்தைப் போதிக்க, உபதேசம் வழியா, அல்லது பிடிவாதம் அழகா ? பாமர ஜனங்களைக் கலக்கவே, தான் பட்டினி கிடக்கப்போவதாய் காந்திஜி சொல்லுகிறார். கெடுவைத்துப், பயம்காட்டி, பாமரர் புத்தியைப் பிடித்து, நிறைவேற்றும் சீர்திருத்தம், எத்தனைநாள் நிலை நிற்கும் ?



கட்சிக்காருக்குமேல், சாட்சிக்காரர்கள் வேகம் கொண்டாடினால், அது கலக விருத்திக்கா ? அல்லது, காரிய ஸித்திக்கா ?

இப்போது காந்திஜியை ஜெயிலில்வைத்திருப்பது, கொள்கையைநசுக்கும் அடக்குமுறைச் சட்டம். நமது சட்டசபைதீரர்கள் காந்திஜியை இன்னும் விடுவித்தாரில்லை. அதே சட்டசபையில், பழங்கொள்கைகொல்லும் புதுச்சட்டம் பண்ணி, ஆஸ்திகரை நசுக்கத் தீவிரமாய் நிற்கிறார் காந்திஜி சிஷ்யர். இதைக் காந்திஜியும் ஒப்புவது, விந்தையினும் விந்தை.

சாஸ்த்ரமறிந்தபேர் தர்மம் சொல்வதா, அல்லது கூட்டம் சேர்ப்பதில் வல்லவர்கள், ஆசார்யபுருஷர்போல், உலகத்தில் நடிப்பதா ?

ஆலயப்ரவேசம் ஆனவுடன், அடுத்தபடியாக சமபங்க்தி போஜனமாம். தின்பதில் வ்யவஸ்தைவிட்டால், பிறகு ஆண் பெண்கள் கூடுவதிலும் அவ்யவஸ்தை ஏற்பட்டு, ஆனந்தம் காணலாமாம். ஜாதிக்குள்ளேதான் கலியாணம் என்ற நிர்ப்பந்தம் சிறிதுகாலத்தில் மறைந்துவிடவேண்டுமாம்.

ஏற்கனவே, நம் குலங்களுக்குத் தீபமாய் விளங்கும் ஸ்த்ரீகள், தொட்டிலிலே அழும் பிள்ளை கிடந்தாலும் அதை விட்டு, புது நாகரீகப் பாங்காய் நாணமும் கூச்சமும் கைவிட்டு, துணிக்கடை கள்ளுக்கடை மறியலுக்குப் போகவும், பேப்பர்களில் தம் பேரையும் படத்தையும் கண்டு மகிழவும் கற்றுக்கொண்டு, கண்யம் பெற்றிருக்கிறார்கள். கட்டுமுளையில் கட்டுண்ட மாடுபோல், ஆயுள் முழுதும் ஒருவனிடம் வாழுதல், அனாவசிய நிர்ப்பந்தம் என்று உபதேசம் சொன்னால், அதற்கும் ஆள்கூட்டம் நிமிஷத்தில் சேர்க்கலாம். பிறகு, ஜாதி வித்தியாசம் அழிய வெகு நாட்கள் செல்லாது. இந்து ஸமூஹத்தின் உருவமும் கொள்கையும் அறவே மறைந்துபோய், இந்துக்களெனும் பேச்சு பழங்காலக் கதையாகும்.

பாரதகண்டத்தில் கூடியுள்ள எல்லோரும், மதம் என்றும், ஜாதி யென்றும் வித்தியாஸம் பாராமல், ஏகமாய் ஒரு வாழ்வு வாழலாம். இத்தனைக்கும் சம்மதம் நமது மனதிலே தோன்றினால், நாம் புதுக் கோள்கைதாஸராய்க் கையெழுத்துப் போடலாம்.

"மனிதர்களெல்லாம் சமமாய்ப் பிறந்தவர்; ஒருவனுக்குள்ள பாத்தியம் மற்றவனுக்குமுண்டு; சொத்தை உடையவர்கள் உரிமைகள் பேசினால், அதைக் கட்சிகட்டி நாம் மாற்றிவிடுவோம்; வாய்க்கினித்ததைத் தின்போம், கண்ணுக்கிசைந்தவளை மணப்போம்; ஆண்டவன் வேண்டாம், ஆச்சாரியன் வேண்டாம், பழங்கொள்கைகளும் வேண்டாம்;" என்று மனம் போனபோக்காய் யுக்திகளைப் பேசும் ஆனந்தக்காட்சி, இப்போது ருஷியா தேசத்தில் காண்கிறோம்.

அதுபோல இங்கேயும் சந்தோஷம் காண ஆசை நமக்கிருந்தால், புதுக்கொள்கை தாஸராய்ச் எல்லோரும் சேரலாம்.

S. M.

---

## ஸனாதன மதத்தின் விசேஷ தர்மங்களும், காங்கிரஸ் முற்றுகையும்.

(1123-வது பக்கத்தொடர்ச்சி)

சுதந்தர பதத்தினாலேயே வைதிகர்களது சுதந்திரத்தை நசுக்குவது நீதியா? ஸ்திரீகள் சில சடங்குகளுடன் கணவர்களை மணக்கிறார்கள். ஒரே ஸ்திரீயிடத்தில் பலர் அத்தகைய சடங்குகளை அனுஷ்டித்தோ ஒழித்தோ மணம் செய்துகொள்ள உரிமையுண்டென்று சொல்லவும் சுதந்தர பதம் இடம் கொடுக்கும் போலும். ஸ்திரீக்கு இஷ்டமிருந்தால் செய்யலாம். அல்லவாயின் கூடாது என்று பதில்கூறலாம், ஸ்திரீக்கு இஷ்டமில்லாவிட்டாலும் அவளது உடல் கூறுக்கு ஆபத்தேற்படாவண்ணம் கலவைசெய்ய விரும்பும் மெஜாரிடி புருஷர்களது மனச்சாட்சிக்கு விரோதமில்லாத சுயேச்சையின் முன்னேற்றத்தை அங்கீகரிக்க மறுப்பது ராஜீயவாதிகளின் நிலையை எவ்வாறு ஸரிகட்டக்கூடும்.

ராஜகோபாலாசாரியார் போன்ற ராஜீயவாதிகள் இவைகளை எல்லாம் சுதந்தரபொருளுக்குப் புறம்பாகக் கூறலாம். அவர்களைவிட முற்போக்காளர் விரும்பினால் அந்த சமத்வ உரிமையை எவ்வாறு நிராகரிப்பது சாத்யப்படும். இந்நிலையில் அவரவர் ஆண்மையை நிதர்சனப் படுத்த பலாத்காரம் உபயோகிக்கப்படலாம்! இதில் சாத்விக சத்யாக்ரஹம் பிரயோஜனப் படாதென்பது திண்ணம். தீண்டாதார் ஆலயப்பிரவேச ஸத்யாக்கிரஹ இயக்கத்திலும் எங்காவது தவறாக உத்வேகத்தில் பலாத்காரம் புகுந்துவிடுமாயின் தேசத்தின் கதி அதோகதியேயாகும்.

இன்னும் மேற்படியில் செல்வோம். தற்கால ராஜீயவாதிகள் ஒருதலைப் பக்ஷமான சுதந்தர போராட்டத்தையே நடத்துகிறார்கள். பணக்காரர்கள் பணத்தில் மிதக்க ஏழைகள் பரமதரித்ர தசையுடன் கஷ்டப்படும் நிலையில் ஏன் உடனே நிலங்களையும் நிதிகளில் போடப்பட்டிருக்கும் ஏராளமான செல்வங்களையும் தேச மக்களுக்கு சமமாகப் பிரித்துவிடக்கூடாது என்றுகேட்பவர்களுக்கு சுதந்திரப்பொருளை எவ்வாறு C. R. வியாக்யானம் செய்ய முற்படுவார்?

கொடுங்கோன்மை ஆட்சியைத்தவிர மற்றசாதாரணவேந்தர் அரசை குடி அரசாக மாற்றியிருக்கும் தேசங்களில் விசேஷ நிம்மதிகள் அதிகமாக ஏற்பட்டுவிட்டனவா? கக்ஷிக் கவர்மெண்டும் எதிர் கக்ஷிகளும் மற்றும் பல பிளவுகளும் இருந்து தடைகள் ஏற்படவில்லையா? மதத்தின் ஸ்வரூபத்தையும் தர்மங்களின் தத்வங்களையும் அமைதியின் மார்க்கங்களையும் அறியாதவர்கள் தனி ஹோதாவிலும் அமைதியை அடையாதவர்கள் அக்ரமமாக அதர்மங்களைப்பிரசாரம் செய்வது நியாயமா? தர்மசாஸ்திரவிதி நிஷேத நெறிமுறைக் கட்டுகளுக்கடங்காத மனச்சாட்சி என்ற பெயராலும் மெஜாரிடி என்ற ஆடம்பர வார்த்தையாலும் தர்ம விரோதமாகச் செய்யப்படும் விபரீத சீர்திருத்தங்களாலும் உலகத்திலே அமைதி நிலைக்காது. நாட்டில் பரிசுத்த வாழ்க்கைமுறை அமையாது. தேசமுன்னேற்றமும் ராஜீய விடுதலையும் ஸித்தியாது.

வைதிக ஸனாதனிகளே! தர்மத்தில் பிடிப்பும் கொள்கைகளில் நம்பிக்கையும், மதத்தில் உணர்ச்சியும் இருக்குமானால் தர்மானுஷ்டானங்களைத் தீவிரமாகக் கைக்கொண்டு அதர்மங்களை ஒழிப்பீர்களாக. ஸதாசாரங்களை விருத்திசெய்வீர்களாக. ஈச்வரானுக்ரஹமும் ஏற்படுமாக.

R. நடராஜன்.

# ॥ श्रीजगद्गुरुनौका ॥

लोकानां - अवनाय - कैलासात् - भूमितलं - सम्प्राप्तो
गौरीशः - पातुसदा - सर्वजनान् ॥

कैलासवासिशशिशेखरश्शंभुः- कलिदोषलुप्तवरधर्ममिहपातुम्
ब्रह्मादिदेवगणसंप्रार्थितोऽभूत् तन्मनोभीष्टपरिपूर्तयेदेवः
शङ्करो भक्तवर शिवगुरोः प्रीत्या - पुत्रीयतः प्राप पुत्रतां तूर्णम्
सोपि बहुमोदतश्शिवगुरुस्सूनो श्शङ्करइतीश्वरनाम च विधाय
उपनयनसंस्कारमप्यस्य मोदात् - पञ्चमेवयसिविधिवत्पितातेने
सद्यस्सशङ्करःसद्गुरुं प्राप्य - सर्वशास्त्रागमानूसादरमधीत्य
स्वर्णवृष्ट्या प्रभुं भूसुरं कृत्वा - श्रीगुरोराज्ञयानिजगृहं प्राप
नक्रसंशापाच्चमोचयित्वाथ - संन्यासमाश्रित्यमातुरनुमत्या
नर्मदातीरगतपूज्यगोविन्द - सद्गुरोरग्रहीत्विधिवदुपदेशं
वाराणसींप्रापदेशिकाज्ञातः - तत्रगङ्गांभसिस्नानमकरोद्धि
अत्रकश्चिद्गुरोश्शङ्करस्यास्य - पद्मपादाभिधश्शिष्यतां भेजे
शिष्योपदेशसमयागतव्यास - तापसकृताशिषं सादरं लब्ध्वा
नीचवेषोज्वलद्विश्वनाथेन - वादंविधायततआशिषंचाप
तत्पुरात् देशिकोराजतंशैलं - जिगमिषुर्मण्डनंमध्यसरणिस्थम्
जित्वाशुवादेनशिष्यतांकृत्वा - परमगुरुमप्यथोगौडपादाख्यम्
भक्त्यानमन्तस्यचाशिषंलेभे - तस्माच्चदेशिकोरजतगिरिमाप्य
राजचूडामणिंप्राणमद्भक्त्या - तेनप्रदत्तवरपञ्चलिंगांश्च
तत्र तत्र प्रतिष्ठाप्यगुरुराजः -पूजनायात्मनोयोगलिङ्गंतम्
स्वीकृत्यसादरं पूजयन्नित्यं - सञ्चारमातनोद्वादिविजयाय
तत्रतत्रस्थितानूदुर्वादिलोकान् - सर्वान्विजित्यवरशास्त्रवचनेन



मात्रास्मृतः प्राप्यततत्समीपंद्राक् - कृत्वान्त्यकृत्यंसविधिवदखिलं च
तोटकादीनूवरानूसगृह्यशिष्यान् - प्रापरामेश्वररामनाथीयम्
तत्रकरणीयमखिलंमुदाकृत्वा - संपूज्यदेवांश्चरामनाथादीन्
तस्मात्क्रमेणभुविसंचरनू्योगी - अद्वैतकल्पकंवर्धयनूसम्यक्
कांचिनगरीमयात्कांक्षितार्थप्रदां - उग्ररूपांशिवांतत्रकामाक्षीं
सौम्यमूर्तिंगुरुस्संविधायाशु - सर्वलोकस्तुतस्सद्गुणांभोधिः
सर्वज्ञपीठाधिदेवतांवाणीं - जित्वाऽऽरुरोहाथतत्पीठवर्यं
तत्पुरिकामकोट्याख्यवरपीठं - स्थापयित्वात्रशुभयोगलिङ्गंस्वं
पूजयामासगुरुराद्भृशंभक्त्या - कंचिदिहकालमथसंवसनूमोदात्
सर्वज्ञनामनिजशिष्यवरमस्मिन् - पीठेभिषिच्यशिवपूजांविधातुम्
शिष्यंचतत्रससुरेश्वराभिख्यं - पीठनिर्वाहादिकर्मणिनियुज्य
सच्चिदानन्दमयशुद्धनिजरूपे - ऐक्यमभजद्गुरुश्शङ्करस्सद्यः
तत्पीठभूषणाचार्यवर्येषु - सर्वजनसंश्लाघ्यसद्वृत्तयुक्तः
प्रख्यातकीर्तिभागद्यविलसनूविभुं- श्रीचन्द्रशेखरेन्द्रादिमहितोज्वलन्
दिव्यनामांकितस्सर्वशास्त्रार्थवित् - ईशांशभूतलसदाद्यगुरुराजः
संप्रतिमहींपुनरवातरन्नूनं - इतिसर्वपण्डितनुतोमहायोगी
धर्मपरिपालनेजागरूकस्सदा - लोकरक्षादरः पुण्यचरिताढ्यः
स्वादुसरसाद्मीयवाङ्मुखाभिख्य - पीयूषवारिधिसुमज्जितजनौघः
त्रिपुरांबिकायुक्तचन्द्रमौळीश - पूजनध्यानादिभास्वरस्वान्तः
लोकगुरुराडीशविष्ण्वादिदेव - पूतपुण्यस्थलीतीर्थसेवाकृते
कांचीपूरुज्वलच्चूतनाथांबिका - दिव्यकुम्भाभिषेकं च सविधातुं
वाराणसीपूतयात्रांचकर्तुं - सर्वतोमोदतस्संचरन्नेष
अव्याजभक्तिभरसंयुतंशिष्यं - शरणगतमघकविपश्चापगेशम्
पातुजगतीगुरुः पातुशिवरूपः - पातुमांसन्ततंकामकोटीशः
शङ्करः पातुमांदेशिकोनित्यं - पातुकरुणानिधिःसद्गुरुःपातु ॥

---

"सर्ववेदा यत्पदमामनन्ति तपांसि सर्वाणिच यद्वदन्ति |"
"वेदैश्चसर्वैरहमेववेद्यो वेदान्तकृत् वेदविदेवचाहम् " ||श्रीभगवद्गीता||

# வாதத்துக்கு மருந்துண்டு, பிடிவாதத்துக்கு மருந்தில்லை.

என்பதுபோல் காந்திஜி பிடிவாதத்துடன் ஸநாதந ஹிந்து மதக் கிரந்தங்களையெல்லாம் ஒப்புக்கொள்ளாமல் கீதை ஒன்றை மட்டிலும் ஒப்புக்கொள்வது ஒழுங்கான முறையல்ல. அந்த கீதையிலும், சில பாகத்தை இவர் ஒப்புக்கொள்ளவில்லை. கீதையிலோ ஸ்ரீ பகவான் வேதங்களைப் புகழ்ந்துபேசுகிறார். வேதங்களில் அநேக பாகங்கள் நசித்துவிட்டனவென்று காந்திஜி குறை கூறுகிறார். நசித்துப்போன பாகங்களைத்தவிர மற்ற பாகங்களுக்காவது ஒரு கௌரவம் கொடுக்கவேண்டாமா? தெரியாத விஷயங்களைத் தெரிவிப்பதுதான் சாஸ்திரம். லாபம் க்யாதி வெகுமதி இவைகளிலேதாவதொன்றை உத்தேசித்து ராகத்வேஷ வாயிலாகச் செய்கின்ற காரியங்களெல்லாம் நல்லவையாக ஏற்கக்கூடியனவல்ல. அத்தகைய காரியங்களுக்குச் சாஸ்திரங்களிலிடமில்லை. நல்லது கெட்டது என்பதை அனுபவத்தைக் கொண்டு மட்டும் தீர்மானித்து விடமுடியாது. அப்படி தீர்மானித்துக்கொண்டாலும் அது யாவருக்கும் பொதுவானதாகாது. ஆகவே யாவருக்கும் நன்மையை நாடுவதானால் யாவருக்கும் பொதுவான பிரமாணமொன்று வேண்டும். பொதுப் பிரமாணத்தை ஸரியானபடி ஒப்புக்கொள்ளாமல், பொதுஜன நலத்தை நாடினால் முடிவில், ஏமாற்றந்தான் ஏற்படும். காந்திஜியின் பேச்சிலோ அநேக அம்சங்களில் பொது பிரமாண வாஸனையே இல்லை. பிரமாண விரோதமும் பரஸ்பர விரோதமும், அதிகம். அதை யாவரும் நம்புகிறார்கள், ஜனங்களிடம்குற்றமென்ன? அவர்கள் யார் எதைத் திருப்தியாகச் சொல்கிறார்களோ? அதையெல்லாம் நம்புகிறார்கள். தலைவரல்லவா யோசிக்கவேண்டும்? அவருக்கோ பிடிவாத மேலீட்டால் பிரமாணலோசனையென்பது மறைபட்டுவிட்டது. இதற்கு மருந்தே கிடையாது.

அவரது நெருங்கிய ஸகாக்களும் அவரைப் போலவேதான். அவர்கள் அவரை தெய்வமாகக்கொண்டாடி அவர் வார்த்தையை



வேகமாகக் கருதுகிறார்கள். காந்திஜியினிடத்தில் ஸநாதனிகள் சொல்லுகிற விஷயங்களை அவர்கள் உண்மையாக ஒப்புக்கொள்வதில்லை. ஸநாதனிகள் பிடிவாதத்துடனிருப்பதாக அவர்களின் கூற்று. ஸநாதனிகளின் பிடிவாதம் நியாயமானது. சீர்திருத்தக்காரர்களின் பிடிவாதமோ நியாயமானதில்லை - என்று நியாயா நியாயங்கள் யார் முடிவுசெய்வது? ஸநாதனிகளின் பிடிவாதத்துக்குப் பிரமாணமுண்டு. அவர்களுக்கு அதில்லை, ஆனால் ஆள் கட்டுண்டு.

அதனால் அவர்களுடைய பிடிவாதம் நியாயமானதாகுமா? நியாயவழியில் செல்வதுதான் ஸத்யாக்ரஹமாகும். இதுவரையில் அநேக விஷயங்களில் ஸத்யாக்ரஹமிவர்களிருந்தார்கள். அப்போது நாடெங்கும் அதே ஸத்யாக்ரஹப் பேச்சுதான். இப்போது அதெல்லாம் அஸத்யம், இதுதான் ஸத்யம். இந்த ஸத்யாக்ரஹமும் எத்தனை காலமோ? இப்படி பிடிவாதத்தால் இவர்கள் ஸநாதனிகளைத் துன்பப்படுத்துவது நியாயமில்லை. "ஒருநாள் கூற்றுக்கு மீசையைச் சிரைப்பதுபோல், மாயவுலகவாழ்வுக்காக நீடூழி கால வாழ்வை கெடுக்கலாகாது. அவர்களுடைய உத்தேசமும் பூர்த்தியடைவதற்கான அறிகுறிகள் யாதொன்றும் தெரியவில்லை. அலகாபாத் ஒற்றுமை மஹாநாட்டுத் தீர்மானமும் இந்தியருக்குள் இன்னம் விவாதிக்கப் படாமலில்லை, அரசாங்கமோ அவசரசட்டங்களை இயற்றிக்கொண்டு வருகின்றது. இந்தியாவின் விடுதலையைப் பற்றிய பிரஸ்தாபம் ஓரிடத்திலும் காணவில்லை. இதற்கிடையில் ஸநாதனிகள் துன்பப்படுகிறார்கள்.

ஸநாதனிகளே! இவர்கள்பிடிவாவாதத்துக்குள்ளாகாதீர்கள். அவர்கள் தீண்டாமைவிலக்கு இயக்க ஸம்பந்தமாக நாடெங்கும் கையொப்பம் வாங்குவதென்று தீர்மானம் செய்துகொண்டிருக்கிறார்கள். இதனை "ஸரியான வழியில்லை" என்று நிராகரித்துவிடுங்கள். ஹிந்து ஆலய தர்மங்களை அப்போது ஞாபகப்படுத்திக் கொள்ளுங்கள். இவ்விஷயத்தில் ஊக்கத்துடனும் பொருமையுடனும் நடந்துகொண்டு ஆலய தர்மங்களை ஆதரியுங்கள்.

சுபம்.

V. ஜகதீசுவர சாஸ்திரிகள்.

# நியூஸ்பேபர் மஹிமை.

'பேபர்' காரர்களை கைவசம் செய்தால்,
உண்மையை மறைக்கும் உபாயம் கையில்.

கோவில்களைத் திறக்க தென் இந்தியாவுக்கு காந்திஜி செய்தி அனுப்பினர். இதற்குத் தூண்டுகோல் ஸ்ரீமான் ராஜகோபாலாசாரியார். அதில் காந்திஜி தமிழிலும் கையெழுத்துப் போட்டாராம். கையெழுத்தின் போட்டோ பேபரில் வந்தது. இதில் என்ன விசேஷம்? ஜனங்களின் புத்தி மயங்கட்டும் என்பதைத் தவிர வேறென்ன உத்தேசம்? காந்திஜி பெயரை ஊஹமாய் உபயோகிக்க ஸ்ரீமான் ராஜகோபாலாசாரியார் அறிவார். தேசியம் பத்திரிகைகள் கைவசமிருக்க, புதுப்ரசார வலையை அகலமாய் வீசினர். சில தினங்களுக்குள்ளே, தமிழுலகமெங்கும் பரபரப்புண்டாக்கினர். ஆனல் ப்ரசார ஸாமர்த்தியம் எத்தனை தான் சாதிக்கும். உண்மையானது ஒளிந்தே போகுமா?

பொம்பூரில் கோவில் திறப்பு விழா! இன்னோரிடத்தில் ஆலயம் நுழைந்தாய்விட்டது! மற்றோரிடத்தில் பெருங்கூட்டம் கூடிற்று! இப்படி தினம் தினம் பேப்பரில் காண்கிறோம். விசாரித்துப் பார்த்தால், அந்தக் கோவில்கள், ரஸ்தாவிலோ, பஜாரிலோ, நதிக்கரையிலோ, குளக்கரையிலோ, வழிப்போக்கர் பார்வையில் இருக்கின்றவைகளாம். அங்கே அப்படி நடந்தது, இங்கே இப்படி நடந்தது என்று பேப்பரில் பார்ப்பதால் நாம் புத்திமோசம் போகிறோம்.

ஆமதாபாத்தில், அம்பாலால் ஸாராபாய் ஜெயினக் கோயிலை திறந்துவிட்டாராம். அவர் ஜாதியார் எதிர்த்துப் பெரும் கல்லல் செய்தாராம். பிந்தின விஷயத்தைப் பேப்பர்கள் மறைத்தன.

ஸெப்டம்பர்மீ 25௨ காசி நகரத்தில், பதினாயிரம் ஹிந்துக்கள் ஆலயப்ரவேசத்தைக் கண்டித்தார்களாம். இதைப் பேப்பர்கள் போடவில்லை. ஸிம்லாவிலுள்ள ஆஸ்திகப்ராமுகர்கள் ஸெப்டம்பர் 26௨ அஸோஸியேடட் பிரஸ்ஸுக்குக் கண்டனம் ஒன்று எழுதிக் கொடுத்தார்களாம். இதையும் இந்தியப் பேப்பர்கள் போடவேயில்லை. அதே தினத்தில் ஆஸ்திக ஹிந்துக்கள் இராஜப்ரதிநிதியைப் பேட்டி கண்டார்களாம். அதையும் பற்றி நமது "தேசிய"ப்பத்திரிகைகள் போடவேயில்லை.



கள்ளிக்கோட்டை ஜாமொரினின் கடிதம் மெட்ராஸ்மெயிலில் பிரசுரமானபின் சில தினம் கழித்து நம்மவர் பேப்பரில் வந்தது. தங்கள் பிரசாரம் இன்னும் கொஞ்சம் வலுக்கட்டுமென்று ஆஸ்திகர் செய்தியைத் தாமதித்தார் போலும். சென்னைக் கந்தஸ்வாமி கோவிலில் பஞ்சமர் புகுந்தார் என்று முதல்நாள் செய்தி. இல்லவே இல்லை என்று மறுநாள் மறுப்பு.

எம். கே. ஆசாரியார், புதுக்கிளர்ச்சியைத் தாக்கி 'மெயிலில் எழுதியிருக்கிறார். நம் தேசத்தைத் தாங்கும் மற்ற பத்திரிகைகள் ஏன் அதைப் போடவில்லை? பம்பாய்க் கூட்டத்தில், 'ஜாதி நசிக்காது. ஸமபோஜனம் வேண்டாம். கலப்பு மணம் வேண்டாம்" என்று பண்டிதமாளவியா வெளியிடச் சொன்னர். இது 'மெயிலில்' காண்கிறது. ப்ராகாசமாய்க் காட்டி; ஸ்வதேசப் பேபர்களில், மலினமாய் குறுக்கி !!

"மதுரை வசமாய்விட்டது. ஸ்ரீரங்கத்தை அசைத்தாய்விட்டது. எல்லா இடங்களிலும் நமக்கு ஏகமான ஆதரவு," என்று அடுக்கடுக்காய் அறிக்கைகள் விடுகிறார் ஸ்ரீமான் ராஜகோபாலாசாரியார். ஒரு எழுத்துவிடாமல் பேப்பர்கள் போடுகின்றன. ஜனங்களைக் கிளப்புவது உண்மையின் சக்தியா ப்ரசாரத்தின் மாயமா?

என்னென்ன நடந்தாலும், ஆஸ்திகர்கள் அஞ்சவேண்டாம். கூச்சல்களும் பொய்களும் செல்லும் வரை செல்லட்டும். ஸத்யமும், தர்மமும் கடைசியில் நிற்கும்.

S, M.

---

## மனுஸ்மிருதி அத்தியாயம் (3)
# சில வசனங்கள்

விவாஹ விஷயங்கள்.

கன்னிகையை வஸ்திரம். ஆபரணங்கள் இவைகளால் அலங்கரித்து வேதாத்யயனம் செய்தவரும், நல்லொழுக்கமுள்ளவரு

மான வரனை அழைத்து விவாஹம் செய்தால் அதற்கு பிராம்ம விவாஹமென்று பெயர்.

2. யக்ஞம் நடக்கும் பொழுது ரித்விக்குக்கு கன்னிகையை அலங்காரம் செய்து கலியாணம்செய்துவைத்தால் அதற்கு தைவ விவாஹம் என்றுபெயர்.

3. பசு, காளை, ஒரு ஜோடியோ இரண்டு ஜோடியோ வரனிடமிருந்து தர்மார்த்தம் பெற்றுக்கொண்டு விதிப்படி கன்னிகாதானம் செய்தால் அதற்கு ரிஷி விவாஹமென்று பெயர்.

4. 'நீங்கள் இருவர்களும் சேர்ந்து தர்மம் செய்யுங்கள்' என்று சொல்லி வரனுக்குத் தகுந்த மரியாதை செய்துகன்யாதானம் செய்தால் அதற்கு பிராஜாபத்ய விவாஹம் என்று பெயர்.

தன்னிஷ்டப்படி தன்னால் கூடியவரையில் கன்னிகைக்கும் அவள் பிதாவுக்கும் பந்துக்களுக்கும் தனம்கொடுத்து கல்யாணம் செய்தால் அதற்கு அஸுர விவாஹம் என்று பெயர்.

6. கன்னிகையும் வரனும் அன்யோன்ய விருப்பத்தால் சேர்ந்தால் அதற்கு காந்தர்வ விவாஹம் என்று பெயர்.

7. வீட்டை உடைத்து பந்துக்களை அடித்து கத்திக்கதரும் பெண்ணை பலாத்காரமாய் அபஹரித்தால் அதற்கு ராக்ஷஸகாரியம் என்று பெயர்.

8. திருட்டுத் தனமாய் கன்னிகையைத் தூங்கும்போதோ குடித்து புத்தி மயங்கியிருக்கும்போதோ புத்தி ஸ்வாதீனமில்லாத போதோ அபகரித்தால் அது, பைசாச காரியமாகும். அது மிக கெட்டது. அதிபாபமானது.

9. பிராமணர்களுக்குள் தீர்த்த தானத்தை முன்னிட்டு கன்யாதானம் செய்வது நிரம்ப உயர்ந்தது. இதர வர்ணங்களுக்கு ஒருவருக்கொருவர் சம்மதமே போதும்.

10. பிராம்மணர்களே! மேற்சொல்லிய விவாஹங்களுக்குள் எதெதுக்கு என்ன என்ன குணமுண்டென்று மனுசொல்லி இருக்கிறரோ அவைகளை முழுமையும் சொல்லுகிறேன். கேளுங்கள்.

R. ஸ்வாமிநாதய்யர்.

## ஆலயப் பிரவேசத்திற்காக உபவாஸமா?

ஆதி திராவிடர்களை ஆலயப்பிரவேசம் செய்துவைக்காதவரையில் தான் பட்டினிகிடக்கப்போவதாக மஹாத்மாகாந்தி பயமுறுத்துகிறர். அதல்லாமல் நான் பட்டினி கிடந்து ஒருக்கால் அது விபரீதமாக முடிந்தால் ஸனாதன தர்மிகளுக்கு நல்லதுதானே, ஏன் அவர்கள் ஆக்ஷேபிக்கிறார்கள் என்றும் கேட்கிறர். சாதாரணமாகவே இவ்விதமான சந்தர்ப்பங்களில் பட்டினிகிடப்பது நிர்ப்பந்தம் செய்வதாகவே முடியும். அதுவும் மஹாத்மாகாந்தியினுடைய சம்பந்தத்தால் நிச்சயமாக அப்படித்தான் முடியும் என்பதில் எவ்வித ஆக்ஷேபணையும் இல்லை. ஸனாதன தர்மிகள் அவருடைய கொள்கைக்காக அவரைத் துவேஷிக்கிறார்கள் என்று அவர் நினைப்பது சுத்தத் தவறுதலேயாகும். ஸனாதன தர்மிகள் பெரும்பாலும் அவரிடத்தில் அபிமானமுள்ளவர்கள் என்பதிலும் அவருடைய ஜீவ்யமானது விலைமதிக்கத்தகாதது என்று உணருகிறார்களென்பதிலும் சந்தேகமே இல்லை. அவருடைய ஆச்ரமத்தைப்போல் அவருடைய பரிபாலனத்திற்குள்பட்ட இடங்களில் ஒரு பிசகு நடந்து அதற்காக அவர் உபவாசம் இருந்தால் அது உணரக்கூடிய தத்வமாக இருக்கும். ஆனால் மதக் கோட்பாடுகளை அநுசரித்து நூற்றுக்கணக்கான வருஷங்களாக இருக்கும் ஒரு பழக்கத்தை மாற்றுவதற்காகப் பட்டினிகிடப்பதில் தத்வத்தைக் கண்டுபிடிப்பது கொஞ்சம் சிரமமாகவே இருக்கிறது.

ஜனங்களுக்கு அவரிடம் உள்ள கௌரவ புத்தி அவருக்கு நன்றாகத் தெரிந்ததே. தான் பட்டினி கிடக்கப்போவதாக அவர் சொல்லாதவரையில் இந்தக் கிளர்ச்சியானது இவ்வளவு பலமாக ஏற்பட்டிருக்காதென்பதை யாராவது மறுக்கமுடியுமா? மதத்திற்கே ஒரு பெரிய குறையென்று இவர் நினைக்கும் விஷயத்தில் விசேஷமிருப்பதாக இன்னொரு சார்பார் நினைப்பதிலும் ஸாரமிருக்கலாமென்று அவர் நினைக்கவேண்டாமா? தன்னுடைய மனதில் மாத்திரம் ஈச்வரன் தன் அபிப்பிராயங்களைத் தெரிவிப்பதாக ஏன் அவர் நினைக்கவேண்டும்? வெகுநாளாக அநுஷ்டானத்தில் இருக்கும் பழக்கங்களை மாற்றுவதில் விஷயங்களைப் பூராவாக ஆராய்ச்சி செய்யாமல் கடுமையான முடிவுக்கு வருவது அவ்வளவு உசிதமாகக் காணப்படவில்லை. அவருடைய சிஷ்யர்களுடைய பிரசாரத்தைப்பற்றி நாம் ஒன்றும் சொல்லுவதற்கில்லை. ஸ்வா ராஜ்யத்

திற்காகப் ப்ரடுபடும் வீரர்களானதால் சேனாதிபதியின் வார்த்தை களை யோஜிக்காமல் பிரசாரம் செய்துவருகிறார்கள். பிதமாகக் குடிப்பதில் கொஞ்சம் விசேஷமிருப்பதாக எனக்குத் தோற்று கிறதென்று மஹாத்மா நாளையதினம் சொன்னால் ஸ்ரீமான் C. ராஜ கோபாலாசாரியார் அந்த சித்தாந்தத்தைப் பிரசாரம் செய்தால் நமக்கு ஆச்சர்யத்தை உண்டுபண்ணாது. அதற்கு உயிரைக் கொடுக்க சக்தி இல்லாவிட்டாலும் சிரமப்பட்டு, கன்றைக் கொன் றுவிடுவது அஹிம்சா தர்மமென்று கொஞ்சகாலத்திற்கு முன் மஹாத்மா காந்தி சொல்லவில்லையா? ஆதி திராவிடர்களுக்கு இது வரையில் ஆலயங்களில் அனுபோக பாத்யம் இல்லாத ஸ்திதியில் அதற்காக வகாலத்து வாங்கியிருக்கும் வக்கீல்கள் அதற்கு வேண் டிய காரணங்களையும் ஆதாரங்களையும் காட்டவேண்டாமா? என் கக்ஷிக்காரனுக்குக் கட்டிடம் வசமாக டிக்ரீ கொடுக்காதவரையில் நான் பட்டினிகிடந்து உயிரைவிடுவேன் என்று சொன்ன வக்கீலை இதுவரையில் பார்த்ததில்லை.

N. சாம்பசிவ அய்யர். B. A., B. L.

நாகப்பட்டணம்.

(29—11—32)

## ஆர்யதர்மம் சந்தாதாரர்களுக்கு அறிவிப்பு.

எங்கள் ஸபாவின் பிரசுரங்களாகிய ஸ்ரீ சங்கரோப தேச ரத்னம், ஸ்ரீபத்மபுராணம், ஸ்ரீமார்க்கண்டேய புராணம், இவை களை நமது ஆர்யதர்மம் சந்தாதாரர்களுக்குமாத்திரம் பாதிவிலைக் குக்கொடுக்கப்பட்டுவருவதை ஸ்ரீஜகத்குரு ஸ்ரீசங்கராசார்யஸ்வாமி கள் சென்னையில் விஜயம் செய்திருப்பதன் ஞாபகார்த்தமாக 31—12—1932 வரையில் அதே பாதிவிலைக்குக் கொடுப்பதாக ஏற்பாடு செய்யப்பட்டிருக்கிறது. ஆஸ்திகர் அனைவரும் ஸம யத்தைக் கைவிடாமல் ஒவ்வொரு சந்தாதாரர்களும் ஒரு ஸெட் புஸ்தகம் வாங்கித் தாங்கள் பயன்பெறுவதோடு எங்கள் ஸபா வின் அபிவிருத்திக்கும் உதவுவீர்களென அன்புடன் அடி பணியும்

தங்கள்,

ல. ராமச்சந்திர சாஸ்திரிகள்.

# வாரவிருத்தாந்தம்.

மைலை வைதிகரது பக்தி. 25உ ஷை பக்தர் ஒருவர் ஸ்ரீ பகவத்பாதாள் ] லோகக்ஷேமார்த்தமாக அர்ச்சித்துவரும் ஸ்ரீசந்திரமௌளீச்வர ஸ்வாமிக்குஓர் ஸ்வர்ணபில்வ தளமாலை செ ய்து ஸமர்ப்பணம் செய்தனர். இங்ஙனம் உத்தம கைங்கரியத் தின் மூலமாக தங்களது சிறந்த பக்தியை வெளியிட்டனர். ஸர்வேச்வரனது கருணைக்குப் பாத்திரமாகி இஹபரச்ரேயஸ்ஸை பெறும் அவர்களைக் கண்டுகளிக்கிறோம்.

பகவானது லீலை. 29உ இந்திய கிருஸ்தவர்களது கூட்டம் திருச்சியில் நடந்தது. பகவானில்லை. வைதிககர்மங்கள் கூடா தென்ற சுயமரியாதைப்பிரசாரத்தைப் பலமாக கண்டித்துப் பலர் பேசினர். ஷை விஷயத்திற்கு எதிர் ப்ரசாரம் செய்யத்தக்க ஏற் பாடு செய்தனர். ஓர் மூலையில் நாஸ்திகத்தைக் கிளப்பி வேறோர் மூலமாக அதை அடக்கி பகவான் என்ன லீலை செய்கிறார். அவ னன்றி அணுவுமசையாது.

வழிகாட்டுகின்றார். 30உ மைலை வைதிகர்கள் ஒன்று சேர் ந்து ஸ்ரீ பகவத்பாதாளுக்கு ஓர் பிக்ஷை செய்து வைத்தனர். ஒவ் வொருவரும் தனது வருவாயில் ஓர் பாகத்தைத் தர்மத்திற்காக விநியோகம் செய்யவேண்டுமென்பது தர்மவிதி. தானம் வாங் கியதில் பாதிபாகத்தைத் தர்மம் செய்ய வேண்டும். அங்ஙனம் செய்வதால் கிருஹஸ்தர்கள் ஸரியாக கர்மாவைச் செய்யாததால் உண்டாகும் பாபமிவரை விட்டகலும் அதிலும் பரமாசார்யபிக்ஷை எனில் ஸ்தம்பம் முதல் பிரும்மாவரையிலுள்ள ஸகலப்ராணிகளுக் கும் அன்னமிட்டதாகும். ஏனையோரிதைக் கைப்பற்றுக.

ஸ்ரீரங்கவைதிகர்கள். 30உ ஸ்ரீரங்கத்திலுள்ள வைதிகர் கள் ஓர் பெரும் ஸபை கூடி சண்டாளர் ஆலயப்ரவேசத்தைக் கண்டித்து தீர்மானம் செய்தனர். அதே சமயத்தில் சென்னை சட்ட சபையில் இதற்கு ஓர் தீர்மானம் நிறைவேறிற்று. இது வைதிகர்களைப் பரீக்ஷிப்பதற்காக ஏற்பட்ட இயக்கம். எல்லோ ரும் ஒன்று சேர்ந்து பலமாக இதை எதிர்த்து ஆலயத்தை ரக்ஷிக் கப் போகிறார்களா? அல்லது ஆலயத்தை அவர்களிடம் ஒப்ப

டைத்து விட்டு வீட்டோடு இருக்கப்போகிறார்களா ? பொருத் திருந்தால் பதில் விரைவில் வரும்.

ஆஸ்திகசிகாமணி:— 4வ கும்பகோணம் ஸ்ரீமான் கே.ஆர் ஸம். சிங்காரம் செட்டியார் என்ற ஆஸ்திகமணி பத்திரிகைகளு க்கு ஆலயப்ரவேச விஷயமாக ஓர் அருமையான விஷயம் எழுதி இருக்கிறார். அதில் சாஸ்திரீயமான அம்சம் நிறைந்திருக்கிறது. அதனருகே சாஸ்திரத்தில் தேர்ந்த வைதிகராம் விபரீதமாக எழு துகிறார். இவர் தன் பெயரை வெளியிடாமலிருப்பதிலிருந்தே இவர் வாதம் எவ்வளவு அழகானதென அறியலாம்.

பலத்த கிளர்ச்சி வேண்டும்:- 17வ ஸ்ரீ அஹோபிலமடாதி பதி அவர்கள் சண்டாளர்ஆலயப்ரவேச விஷயமான சட்டத்தைக் கண்டித்து ராஜப்ரதிநிதிக்கும் சென்னை கவர்னருக்கும் தந்தி கொடுத்ததாக செய்தி வெளியாயிற்று. காசியிலிருந்து வர்ணாச் ரம ஸ்வாராஜ்யசங்க காரியதரிசியும் மற்றோர் பண்டிதரும் கேரளம் வந்து 14வ குருவாயூர் ஆலயாதிகாரியைக் கண்டு பேசினர். தர்ம ப்ரசாரம் செய்யப் போகின்றனர். 12வ நாகை ஹிந்து மதாபிமான சங்கத்தாரால் ஓர் கூட்டம் கூடி ஷ்டி விஷயத்தைக் கண்டித்தது, இன்னும் பலத்த கிளர்ச்சி வேண்டும்.

ஸ்ரீ ஜகத்குருவே ஆப்த நண்பர்:- 15வ ஓர் ப்ரபல தேசீய வாதி சென்னையைப்பாவனமாக்கும் ஸ்ரீ ஜகத்குருவைத் தரிசித்து ஒரு மணி நேரம் தீண்டாமை முதல் பல விஷயங்களைப் பேசி னார். வெளியில் வந்து அவர் சண்டாளருக்கு ஸ்ரீ ஜகத்குருவை விட தீர்க்க திருஷ்டியும் அந்தரங்க சுத்தியும் செல்வாக்கும் வாய் ந்த மற்றோர் நண்பர் கிடைப்பதரிது என்றுரைத்தார். தேசத் தின் துரதிருஷ்டவசமாக எவரைப்பற்றி ஸ்மரிக்கவும் வேண்டா மோ அவரைப்பற்றியே எங்கும் அதிகப் பேச்சாய்விட்டது. ஸர்வ லோகபந்துவான ஸ்ரீபரமாசாரியாளே அவர் நண்பரெனக் கூறு வது காலவியல்பு போலும்.

மாணவரின் பக்தி:- திருமலை மாணவர்கள் ஒன்றுசேர்ந்து ஸ்ரீபகவத்பாதாளது பூஜைக்கு ஸ்வர்ணத்தினால் ஓர் பாத்திரம் செய்து ஸமர்ப்பித்தனர். மாணவரது பக்தி மறவாதிருக்கும் என்று மஹாஸன்னிதானம் மகிழ்ச்சியுடன் அவர்களை ஆசீர்வதித்



தனர். நற்கருமத்தில் ஈடுபட்ட மாணவருக்கு நீண்ட ஆயுளும் மதாபிமானமும் பெருக.

ஸ்ரீ பாரதீ கிருஷ்ணதீர்த்தர்:- 17வ காசியில் நடந்த வர்ணாச் ரம ஸ்வாராஜ்ய ஸபையில் இவாள் தலைமை வஹித்தார்கள். ஸ்ரீ ஜகன்னாதத்திலுள்ள ஸ்ரீசங்கராசார்ய மடத்தின் அதிபதி இவாள் முன்னுரையில் ஆலயத்தில் சண்டாளரை விடுவது மிக சாபமென் றார். அங்ஙனமே தீர்மானம் நிறைவேறியது, இங்ஙனமே ஸ்ரீ மடாதிபதிகளும் பெரியோர்களும் பண்டிதர்களையும் கொண்டு தர்மப் ப்ரசாரம் செய்தால் இந்த ஆக்ரஹம் அகன்றுவிடும்.

ஓர் வேத வகுப்பு:- 18வ சைதாப்பேட்டைக் கடைத்தெரு விலுள்ள ஓர் பக்தர் வீட்டிலே ஸ்காந்த உபன்யாஸம் பூர்த்தியா னது. அன்று உபன்யாஸகரது ப்ரார்த்தனைக் கிணங்கி ஓர் வேத வகுப்பு ஆரம்பிக்கப்பட்டது. ஆஸ்திகரான உத்யோகஸ்தர் பலர் அத்யயனம் செய்கின்றனர். இவர்களது சிரத்தை நீடித்திருக் கும்படி பகவானை வேண்டுகிறேன். ஆஸ்திகர் வாழ்க.

தர்சந கலாநிதி. சென்ற தீபாவளியன்று ஸ்ரீ ஜகத்குரு ஸ்வாமிகள் மடத்தில்மஹாமஹோபாத்யாய குப்புஸ்வாமி சாஸ்திரி கள் வாளுக்கு ஷ்டி பட்டமளிக்கப்பட்டது.ஆங்கிலத்தில் எம். ஏ. பட்டம் பெற்ற அவாள் வடமொழியில் மஹாபண்டிதராக இருப் பதும் பலவிடங்களில் பட்டம் பெற்றதும் வித்வத்கோஷ்டி அறி யாததல்ல. எல்லாவற்றையும்விட ஸ்ரீ மஹா ஸந்நிதானமளித்த பட்டத்திலே எல்லோருக்கும் அதிமதிப்பெற சொல்லாமலே விளங்கும்.

அளவுகடந்த குரு பக்தி:- 19வ கும்பகோணத்தில் ஸ்ரீ ஜகத் தாசாரியாளது படம் அழகிய விமானத்தில் அலங்கரிக்கப்பட்டு ஸகல ஸந்நாகத்துடன் ஊர்வலமாகக்கொண்டு வரப்பட்டு தார்மிக துரந்தரரான எஸ். ஆர். சுந்தரமய்யர் கிருஹத்திற்கு வந்தது. அவ் வூரைவிட்டு பகவத்பாதாள் பல்லாண்டுகளாக வெளியில் ஸஞ்சரிப் பதால் ஸ்ரீ அவாள் மஹாமகத்திற்கு வருவதைக் கேட்டு ஆஸ்தி கர் உள்ளம் பூரித்தது. மிகப்பல ஆஸ்திகர் சூழ இரண்டாயிரம் பேர் பின் தொடர்ந்தனர். பாப்ரும்ம ஸ்வரூபமாக விளங்கும் பரமாசாரியாளின் ஸன்னிதான ரஸத்தை அறிந்தவர் விடுவரோ?

தார்மிகர் ஸபை; 20உ ஸ்ரீரங்கத்தில் ஓர் பெருங்கூட்டம் கூடிற்று. பல வித்வான்கள் ஆலயப்பெருமையைப் பற்றி பேசினர். தீண்டாதாரை ஆலயத்தில் விடுவதைக் கண்டித்தனர். 18 தேதி கும்பகோணத்தில் ஓர் ஸபை கூடிற்று. குருவாயூர் ஆலய தர்மகர்த்தாவின் தர்மாபிமானத்தைக் கொண்டாடி ஓர் தீர்மானம் செய்து அனுப்பியது. 16உ திண்டுக்கல்லில் அயர்ந்துகிடந்த ஸனாதன தர்ம ஸபைக்கும் புத்துயிர் அளித்துத் திருத்தி அமைத்தனர். 20உ நாகையில் ஓர் வைதிகஸபை நடந்தது. திருப்பதியிலிருந்து சண்டாளரை ஆலயத்தில் விட சட்டங் கூடாதென ஒரு மகஜர் கவர்னருக்குச் சென்றது.

பிற்புத்தி:- 20உ திருச்சியில் ஓர் காங்கிரஸ் கூட்டம் நடந்தது. வழக்கப்படி ஆலயம் வைதிகசாஸ்திரம் முதலியவைகளுக்கு நிந்தாவாசகங்கள் சரமாரியாகப் பொழியப்பட்டன. ஸ்ரீ காந்தியின் ஆப்த சிஷ்யர் ஒருவர் இதைக் கேட்டு வருந்தி கண்டித்தார், காங்கிரஸ் இயக்கத்தால் யார் வேண்டுமானாலும் எதையும் தங்கு தடையின்றி பேசுவதென்பது ஏற்பட்டுவிட்டது. வருந்தி என்னலாபம்? அவரவர் இஷ்டப்படும் மகாபாப காரியத்தையும் ஸாதிக்க உண்ணாவ்ரதம் ஆரம்பிக்கப் போகின்றனர், இதை முன்னதாகவே தீர்க்கமாக யோசித்து ஆரம்பித்திருக்க வேண்டும். ஹரிவாஸரமான ஏகாதசியில் எல்லோரும் உபவாஸமிருந்தால் ஸ்வராஜ்யம் வரும் என்று உபதேசிக்கலாகாதா? நல்ல பயனுண்டாகுமே?

பாததூளி:- 20உ ஹைத்ராபாத் ஸமீபத்திலுள்ள கத்வால் ராஜா பல்லாண்டுகளாக நடப்பது போல் இவ்வாண்டும் பண்டித பூஜை நடத்தினர். 15000 ரூ ஸம்பாவனை செய்தார். பட்டை மேலே விரித்து அதன் மேல் பண்டித பிராமணர்களை நடக்கும்படி செய்து அந்த பாத தூளியைத் தலையில் வஹித்து நெற்றியிலும் இட்டுக்கொண்டார். வேத வேதாங்கங்களை அறிந்து அனுஷ்டானம் செய்யும் பிராமணர்களிடம் ஸகல தேவதைகளும் குடிகொண்டிருப்பதால் இங்ஙனம் அரசர்களும் பூஜிக்கின்றனர். தற்கால பிராமணர்கள் இதைக் கவனிக்கட்டும்,

வெண்குடை. 21உ ஸ்ரீ ஜகத்குரு பரமாசார்யாள் தண்டாங்கோரை பிரும்மஸ்ரீ அப்பாதுரை வாஜபேயிக்கு, அவர் பல க்ரதுக்களைச் செய்ததுடன் வாஜபேயமும் செய்திருப்பதால் ஷை யாகம் செய்யும்போது அரசர்கள் வெண்குடை பிடிப்பது வழக்கமென ஸ்ரீ அவாள் உபன்யாஸம் செய்தபடி வெண்குடையை அளித்தார்கள். ஸ்ரீ ஜகத்குருஸ்தாநம் சக்ரவர்த்திஸ்தாநத்திற்கு ஸமமென பல அறிய செயல்களாலுமறிகிறோம். எங்கும் எல்லாமாயுள்ள பரமசிவன் சக்ரவர்த்தியாயிருப்பதில் என்ன விந்தை?



ஸ்ரீ ஸந்நிதான மஹிமை. 21உ ஸ்ரீமான் வெங்கிடாசலய்யர் எனும் உத்யோகஸ்தர் ஸ்ரீ பரமாசார்யாள் ஸந்நிதியில் சென்னை ஸம்ஸ்கிருத கலாசாலைக்கு 1001ரூ. ஸம்மானம் செய்தார். ஸ்ரீபகவத்பாதாளது பாததூளியும் வாகம்ருதமும் சித்தி நிறைந்த ஷை கலாசாலைப் பலாது மநதை இழுத்துவிட்டது. தனது ஸொந்ததநத்தில் ஓர் பகுதியைக்கொண்டு காலஞ்சென்ற வி. கிருஷ்ணஸ்வாமி அய்யர்வாள் ஆரம்பித்த ஷை கலாசாலையை பிரும்மஸ்ரீ தர்மரக்ஷாமணி பாலசுப்ரமண்ய அய்யர்வாள் பலவகையிலும் விருத்தி செய்வதோடு ஸ்ரீ பரமாசார்யாள் மூலம் பரிமளிக்கச் செய்தது, பாஷைக்கும் பாஷாபிமானிகளுக்கும் ஏற்பட்ட பெரும் பாக்யமேயாகும். அவர் நீண்ட ஆயுளைப்பெற்று மற்றும் பல தர்மங்களைச்செய்க!

ஸநாதந ஹிந்து. 23உ பாலக்காட்டில் ஷை பெயருடன் ஓர் மலையாள பத்ரிகைவெளிவந்ததென அறிகிறோம். சண்டாளரை ஆலயத்தில் நுழையவிடக் கூடாதென்பதே இதன் முக்ய நோக்கமாம். இதன் ஆசிரியர் ஓர் பிராமணரல்லாதாரே என தெரிகிறது. இப்பத்திரிகையின் பெயரே அதன் கொள்கையை வெளியிடுவதாயிருக்கிறது. நாளுக்குநாள் பாலக்காட்டில் தீண்டாதார் ஆலயப்ரவேசத்திற்கு எதிர்ப்பு பலமாகிக் கொண்டுவருகிறது. எல்லாம் ஈசன் செயல். ஷை பத்ரிகையை வரவேற்றுபல்லாண்டு கூறுவாம்.

குருவாரத்தில் ஸ்ரீ குருவிஜயம். 1உ ஸ்ரீ ஜகத்குரு பரமாசார்யாள் சென்னைக்கடுத்த மாம்பலத்திற்கு விஜயம்செய்கிறார்கள் பல மாதங்களாக பக்தர்கள் கோறியது அன்றே கைகூடிற்று. பொதுவாக மஹாஜநங்கள் ஸ்ரீ பரமாசார்யாளிடம் பக்திகொண்டு தம்மாலான கைங்கரியத்தைச் செய்துவருகின்றனர். பலமாத பூஜைநடக்கும்,ஸொந்த தநத்தைக்கொண்டு ஏகதேசத்தில் பிக்ஷை

செய்துவைக்க மூவர் முன்வந்திருக்கின்றனர். ஸ்ரீராமநவமியில் பல்லாயிரம் பேருக்கு அன்னதானமும் உத்ஸவமும் பூஜையும் சிறப்பாக செய்துவரும் உத்த தார்மிகர் ஸ்ரீமான் ஹரிதாஸஸ்வாமி களைக் கொண்டாடாதாரில்லை. இவரே வரவேற்புக்கமிட்டித் தலைவருமாவர். ஸ்ரீயவாளிடம் பூர்ணபக்திகொண்ட பல கமிட்டி மெம்பர்களுண்டு. பூர்ண பரம உத்ஸாஹத்துடன் கூடி தனி பிக்ஷை நடத்தும் மற்ற பெரியார் ஒருவரையும், ஸ்ரீ மதாசார்யாள் எனில் மெய் மறந்து முக்கரணத்தையும் பொருளுடன் பகவத் பாதாளுக்கு அர்ப்பணம் செய்யும் ஓர் தனிபிக்ஷை நடத்தும் சிறு பிரும்மசாரியையும் மேல்கண்டவர்களையும் பகவானு சிர்வதிப் பாராக. இரவுபகலாக விதிதோறும் அலையும் கமிட்டி அங்கத் தினரைக் கொண்டாடுகிறோம். வெ. ஸோமதேவ சர்மா

---

# மதிப்புரை.

## விநாயக பூஜாவிதி.

மும்மதஸ்தரும் முதற்கடவுளாகிய விநாயகரைப் பூஜிப்பது நமது தேச ஸம்பிரதாயம். எல்லா வைதிக காரியங்களுக்கும் முத லில் விநாயகபூஜை செய்தேதீரவேண்டும். அது செய்யாவிட்டால் எந்தக்காரியமும் எளிதில் கைகூடுவதில்லை. அதற்கும் விதி ஒன்று வேண்டும். விநாயகருடைய பூஜை நித்யம், நைமித்திகம், காம்யம் என்று மூன்றுவிதம். அதில் காம்ய பூஜையைத்தவிர நித்ய நைமித்திக பூஜையில் விதிமாறுதல் விசேஷமாக ஒன்றுமில்லை.

இந்த புஸ்தகம் விநாயக நித்ய நைமித்திக பூஜாக்கிரமத்தை அறிவிக்கின்றது. இது தமிழ்பாஷையில் ஸம்ஸ்கிருத எழுத்துத் தெரியாதவர்களுக்கு உபயோகப்படும்படியாக சுத்தமாக எழுதப் பட்டிருக்கிறது. விநாயகபூஜை செய்பவர் ஒவ்வொருவருக்கும் இது அவச்யமாகும். இதனைத் தொகுத்தவர் ஸ்ரீமான் K. சாரங் பாணி ராவ். இதன்விலை 0-1-6 தான். கிடைக்குமிடம்:—

மானேஜர்,

ஸ்ரீகிருஷ்ணவிலாச புஸ்தகசாலை,

சக்கிரபாணிஸ்வாமி கோவில் வடக்குவீதி,

கும்பகோணம்

---

